# த்வாதசலிங்க ஸ்தோத்ரம்

"த்வாதசம்" என்றால் பன்னிரண்டு. பாரததேசத்திலுள்ள பன்னிரண்டு சிவமஹா க்ஷேத்ரங்களிலுள்ள ஜோதிர்லிங்கங்களை இந்த ஸ்தோத்ரம் துதிக்கிறது.

(1) ஸோமநாதர் விளங்குவது ஸௌராஷ்டிரத்தில் உள்ள ஸோமநாதபுரம்.

(2) மல்லிகார்ஜுனர் விளங்குவது ஆந்திரத்திலுள்ள ஸ்ரீசைலம்.

(3) மஹாகாலேசர் விளங்குவது மத்யப்பிரதேசத்திலுள்ள உஜ்ஜயினி.

(4) ஓம்காரேசன் அல்லது அவலேச்வரர் என்பவர் விளங்குவது பம்பாய்க்கு வடக்கே சம்கார் மாந்தாதா. (மர்தக் ரயில் நிலையம்).

(5) வைத்யநாதர் விளங்குவது மஹாராஷ்டிரதிலுள்ள பரலி வைத்யநாத்

(6) நாகநாதர் அல்லது நாகேசர் விளங்குவது பரலிக்கு வடக்கே உள்ள தாருகாவனம் எனும் ஔந்த். (சாண்டி ரயில் நிலையம்).

(7) விச்வநாதர் விளங்குவது பிரஸித்தமான காசி.

(8) பீமசங்கரர் விளங்கும் பீமசங்கரம் என்பது பூனா - ஜுன்னார் மார்க்கத்தில் ஜுன்னாருக்கு 90 மைலில் உள்ளது.

(9) ராமேச்வரர் எனும் ராமநாதர் விளங்குவது புகழ்பெற்ற ராமேச்வரத்தில்.

(10) த்ர்யம்பகேச்வரர் விளங்குவது நாஸிக்ரோட் ரயில் நிலையத்தருகே உள்ள கௌதமீதடம்.

(11) கேதாரேச்வரர் விளங்குவது புகழ்பெற்ற கேதாரிநாத் - ஹிமாலயத்தில் உள்ளது.

(12) திஷணேசர் என்னும் குஸ்ருணேசர் என்றும் கூறப்படுபவர் எல்லோரா குகைக்கருகே விளங்குகிறார்.

**ஸௌராஷ்ட்ர தேசே வஸுதா$^{4}$வகாசே**
**ஜ்யோதிர் மயம் சந்த$^{3}$ரகலாவதம்ஸம் |**
**ப$^{4}$க்திப்ரதா$^{3}$நாய க்ருதாவதாரம்**
**தம் ஸோமநாத$^{2}$ம் சரணம் ப்ரபத்$^{3}$யே ||** **1**

உலகத்தில் உகந்த இடமான ஸௌராஷ்ட்ர தேசத்தில், ஒளிமயமாக, பிறைச்சந்திரனை முடியில் கொண்டு, ஜனங்களுக்கு பக்தியை ஊட்டுவதற்கே அவதரித்த ஸ்ரீஸோமநாதரை சரணம் அடைகிறேன்.

# த்வாதசலிங்க ஸ்தோத்ரம்

**ஶ்ரீசைலச்ருங்கே3 விவித4ப்ரஸங்கே3**
**சேஷாத்3ரிச்ருங்கே3பி ஸதா3வஸந்தம்**
**தமர்ஜுநம் மல்லிகபூர்வமேநம்**
**நமாமி ஸம்ஸாரஸமுத்3ரஸேதும் ||** 2

பலவாறு நற்சேர்கை பெற்ற ஶ்ரீசைலமலையுச்சியிலும் சேஷாத்ரி மலையுச்சியிலும் எப்பொழுதும் வசிக்கிறவரும், பிறப்பிறப்பாகிற கடலுக்குக் கரையாக இருப்பவருமான ('அர்ஜுன' என்பதற்கு முன் 'மல்லிகை' என்பதைக் கொண்ட) மல்லிகார்ஜுனர் என்று புகழ் பெற்றவரை வணங்குகிறேன்.

**அவந்திகாயாம் விஹிதாமதாரம்**
**முக்திப்ரதா3நாய ச ஸஜ்ஜநா நாம்: |**
**அகாலம்ருத்யோ: பரிரக்ஷணார்த2ம்**
**வந்தே3 மஹாகாலமஹம் ஸுரேசம் ||** 3

அவந்தி என்னும் நன்மக்களுக்கு முக்தியைக் கொடுப்பதற்கும், காலம் வராதபோதே ஏற்படும் மரணத்திலிருந்து காப்பதற்கும் உஜ்ஜயிநியில் அவதரித்தவரும், தேவர்கள் தலைவனான மஹாகாலேச்வரரை வணங்குகிறேன்.

**காவேரிகா நர்மத3யோ: பவித்ரே**
**ஸமாக3மே ஸஜ்ஜந்தாரணாய |**
**ஸதை3வ மாந்தா4த்ருபுரே வஸந்தம்**
**ஓங்காரமீசம் சிவமேகமீடே3 ||** 4

காவேரீ நர்மதை இவைகளின் சேர்க்கையில் தூய்மையான மாந்தாத்ருபுரம் என்னுமிடத்தில் நல்லவர்களைக் கரையேற்ற வஸிப்பவரான ஓங்காரேச்வரர் எனும் பரமசிவனைத் துதிக்கிறேன். (இங்கு'காவேரி'என்பது நர்மதையோடு சேரும் ஓர் ஆறு)

**பூர்வோத்தரே பாரலிகாபி4தா3நே**
**ஸதா3சிவம் தம் கி3ரிஜாஸமேதம் |**
**ஸுராஸுராராதி4த பாத3பத்3மம்**
**ஶ்ரீவைத்யநாத2ம் ஸததம் நமாமி ||** 5

வடகிழக்கில் "பரலி" என்னும் திருத்தலத்தில் மலைமகளோடு கூடிய ஸதாசிவனாகி, தேவர்களாலும் அரக்கர்களாலும் பூஜிக்கப்பட்ட திருவடித் தாமரைகளையுடைய ஶ்ரீவைத்யநாதர் என்னும் பெயரில் எப்பொழுதும் வணங்குகிறேன்.

**ஆமர்த3ஸம்ஜ்ஞே நகரேச ரம்ய**
**விபூ4ஷிதாங்க2ம் விவிதை3ச்சபோ4கை3: |**
**ஸத்3பு4க்தி முக்தி ப்ரத3மீசமேகம்**
**ஶ்ரீ நாக3நாத2ம சரணம் ப்ரபத்3யே ||** 6

## த்வாதசலிங்க ஸ்தோத்ரம்

ஆமர்தம் அல்லது தாருகாவநம் என்ற பெயர் பெற்ற அழகிய திருத்தலத்தில் பலவிதமான பாம்புகளை அணிகலன்களாய்க் கொண்டு தர்மத்திற்கு விரோதமில்லாத போகமும் மோக்ஷமும் ஒருங்கே கொடுக்கக் கூடிய ஒரே ஈச்வரனான திருநீற்று மேனியராக விளங்கும் நாகநாதரைச் சரணம் அடைகிறேன்.

**ஸாநந்த$^{3}$மாநந்த$^{3}$ வநேவஸந்தம்**
**ஆனந்த$^{3}$கந்த$^{3}$ம் ஹதபாபப்$^{3}$ருந்த$^{3}$ம் ।**
**வாராணஸீ நாத$^{2}$மநாத$^{2}$ நாத$^{2}$ம்**
**ஶ்ரீவிச்வ நாத$^{2}$ம் சரணம்ப்ரபத்$^{3}$யே ॥** 7

ஆனந்தவனம், வாராணஸீ என்னும் பெயர் கொண்ட காசீ நகரத்தில் பாபக்கூட்டங்களை ஒழிப்பவராயும், மகிழ்ச்சிக்கு மூலகாரணராயும், ஆதரவற்ற வர்களுக்கெல்லாம் ஆதரவு கொடுத்துக் காப்பவருமான இன்பமயமான ஶ்ரீவிச்வநாதரைப் புகலிடமாய்க் கொள்கிறேன்.

**யோ டா$^{3}$கிநீ சாகிநிகா ஸமாஜே**
**நிஷேவ்ய மாண: பிசிதாசநைச்ச ।**
**ஸதை$^{3}$வ பீ$^{4}$மாதி$^{3}$ பத$^{3}$ப்ரஸித்$^{3}$த$^{4}$ம்**
**தம் சங்கரம் பக்தஹிதம் நமாமி ॥** 8

டாகிநீ சாகிநி (என்னும் சக்திகளை) கூட்டத்தாலும், அரக்கர்களாலும் பூஜிக்கப் பட்டவரும் பக்தர்களின் நன்மையிலேயே கருத்துள்ள புகழ்வாய்ந்த பீம என்னும் பெயரோடு கூடியவருமான சங்கரரை (பீமசங்கரரை) வணங்குகிறேன்.

**ஶ்ரீதாம்ரபர்ணீஜலராசியோகே$^{3}$**
**நிப்$^{3}$த்$^{3}$த்$^{4}$யஸேதும் நிசிபி$^{3}$ல்வபத்ரை: ।**
**ஶ்ரீராமசந்த்$^{3}$ரேண ஸமர்ச்சிதம் தம்**
**ராமேச்சவராக்$^{2}$யம் ஸததம் நமாமி ॥** 9

தாமிரபரணி ஆற்றின் நீர் கடலில் கலக்கும் இடத்தில் அணைகட்டி, இரவில் ஶ்ரீராமசந்திரரால் (வில்வங்களால்) நன்கு பூஜைசெய்ய வில்வங்களால்) நன்கு பூஜை செய்யப்பட்ட ராமேச்வரரை எப்பொழுதும் வணங்குகிறேன்.

**ஸிம்ஹாத்$^{3}$ரிபார்சவேபி தடே ரமந்தம்**
**கோ$^{3}$தா$^{3}$வரீ தீரபவித்ர தேசே ।**
**யத்$^{3}$த$^{3}$ர்சநாத்பாதகஜாதநாச:**
**ப்ரஜாயதே த்ரயம்ப$^{3}$கமீசமீடே$^{3}$ ॥** 10

ஸிம்மாத்ரி மலைத்தாழ்வரையில் இன்புற்றவரும், மிகப்புனிதமான கோதாவரி நதிக்கரையில் இருப்பவருமான எவரைக்கண்ட உடனே பாபக் கூட்டங்கள் அழிந்துவிடுமோ அந்த த்ரியம்பக ஈச்வரனைத்துதிக்கிறேன்.

**ஹிமாத்$^{3}$ரிபார்ச்வேபி தடே ரமந்தம்**
**ஸம்பூஜ்யமானம் ஸததம் முநீந்த்$^{3}$ரை: ।**

**ஸுராஸுரைர்யக்ஷ மஹோரகா[3]த்[2]யை:**
**கேதா[3]ரஸம்ஜ்ஞ ம் சிவமீசமீடே[3] ||** 11

இமயமலைத்தாழ்வரையில் இன்புற்றவரும், சிறந்த முனிவர்களாலும், தேவர்கள், அரக்கர்கள், யக்ஷர்கள், உரகர்கள் முதலிய எல்லோராலும் பூஜிக்கப்படுகிற சிவன், ஈசன் எனப் பெயர் பெற்ற கேதாரேச்வரரைத் துதிக்கிறேன்.

**ஏலாபுரீ ரம்ய சிவாலயேஸ்மிந்**
**ஸமுல்லஸந்தம் த்ரிஜ[3]கத்[3]வரேண்யம் |**
**வந்தே[3] மஹோதா[3]ரதரஸ்வபா[4]வம்**
**ஸதா[3]சிவம் தம் தி[4]ஷணேச்வராக்[2]யம் ||** 12

ஏலாபுரம் (எல்லோரா) என்னுமிடத்தில் உள்ள அழகான சிவாலயத்தில் சிறந்து விளங்குபவரும், மூவுலகிலும் போற்றப்படுபவரும், மிக மிக உயர்ந்த உவமையற்ற இயல்பை உடையவருமான திஷணேச்வரரான ஸதாசிவனை வணங்குகிறேன்.

**ஏதாநி லிங்கா[3]நி ஸதை[3]வமர்த்யா:**
**ப்ராத படா[2]ந்த: அமல மாநஸாச்ச: |**
**தே புத்ர பௌத்ரைச்ச த[4]நைருதா[3]ரை :**
**ஸத்கீர்த்திபா[4]ஜ: ஸுகி[2]நோப[4]வந்தி ||** 13

இந்த 12 லிங்கங்களின் துதியை தூயமனதுடன் காலையில் பாராயனம் செய்பவர்கள் பிள்ளை பேரன் அளவற்ற செல்வம் நல்ல புகழ் இவைகளுடன் நலனுடனிருப்பார்கள்.

